எள்ளளவேனுமிருக்குமாகில் தேசிகரை பூஷிக்கவும் மற்றையாசாரியர்களை தூஷிக்கவும் ப்ரஸக்தியுண்டாகாதன்றே. தேசிகரை எம்பெருமானார்க்கு மேலாகமட்டு மன்றிக்கே எம்பெருமானுக்கும் மேலாக வைத்து எழுதினாலும் ஸ்ரீ வைஷ்ணவ ரென்று பேர்பெற்றவர்—உண்மையான ஸ்ரீ வைஷ்ணவர் பொறுமைப்படமாட்டார். பொறுமைப்படுவதற்கு விஷயமென்ன இருக்கிறது. தேசிகருக்கு யாரால் எதில் என்னகுறை சொல்லமுடியும். அவருடைய நிஜஸ்வரூபத்தைத் தெரிந்துகொள்ளாமல் அவரோடு உறவு பிடித்துக்கொண்டதுமன்றிக்கே லோகக்ஷேபத்தையும் விளைத்து வருகிறார்களே! என்பதுதான் சோசநீயம். தேசிக சரித்திரத்தில் எழுதியிருக்கிறார்—பிராட்டிஸ்வரூபத்தையும் பிரபத்திஸ்வரூபத்தையும் தாறுமாறாக்கின வகுப்பினரைக் களைந்தொழிக்கவே தேசிகனவதாரம் என்று. இவ்விரண்டு விஷயங்களிலும் தாறுமாறாக எழுதின வகுப்பினர் யார்? தேசிகன் களைந்தொழித்த விதம் யாது? இதை இரண்டே பக்கத்தில் எழுதி உலகுக்கு வெளிச்சம் காட்டலாமே. அதற்கு வழி இல்லையே. பாடின பாட்டையே பாடிக்கொண்டிருப்பர்.

இவர் தேசிகதரிசனமென்கிற மகுடம் வைத்ததே மிகுப்பிசகு. கூரேசதர்சனம், பட்டார்ய தர்சனம், லோகார்ய தர்சனம் என்றிப்படி வழங்குவது யுக்தமானால் இதுவும் யுக்தமாகலாம். ஆசார்ய வாசகமான தேசிக சப்தம் பகவத் ராமாநுஜாரயரைத்தான் குறிக்கிறது என்பரேல் ஒருவாறு உய்யவிரகுண்டு. ஆனால் அப்படிச் சொல்ல இவர் முன்வர முடியாது; முன்வரவும் மாட்டார். ஏதோ வீணை அபிமானத்தை வைத்து இவர் செய்வது செய்க. கடகாலில்லாத சுவர் எவ்வளவு உயரம் எழும்புமென்று பார்ப்போம். "விசிஷ்டாத்வைத ஸித்தாந்தத்துக்கு ஆதி காலத்திலேயே டங்கர், த்ரமிடர், குஹதேவர் போதாயனர் முதலானோர்களால் பாஷ்யங்களாலும் வ்ருத்திகளாலும் நல்லமுறையில் அடிகோலப்பட்டது" என்று ஆரம்பிக்கிறார். இங்கே ஊன்றிக் கேளுங்கள். ஆங்காங்கு இண்டெக்ஸ் பண்டிதர்களென்று சிலரைச் சொல்லுவதுண்டு. சில பெரிய புத்தகங்களில் உள் விஷயங்களுக்கு அட்டவணை யிடுவதுண்டே; அதற்குத்தான் இண்டெக்ஸ் என்று பெயர். புத்தகத்தினுள்ளே கண்ணைச் செலுத்தாமல் அந்த அட்டவணையை மட்டும் மனனம் செய்துவிட்டு ப்ரஸங்கங்கள் செயவார்கள். அதைக்கொண்டு 'இவர்கள் பஹுக்ரந்தங்களைக் கண்ட பாடம் செய்தவர்கள்' என்று அறிஞர்களும் பேசிவிடுவார்கள்.

பாம்பே நிர்ணய ஸாகர பிரஸ், காசீ சௌகம்பா, பூனா ஆனந்தாச்ரமம் முதலான விடங்களில் பல அபூர்வமான க்ரந்தங்கள் பதிப்பித்து அவற்றுக்கு விரிவான கியாடலாகும் வெளியிட்டிருக்கிறார்களன்றே. அதில் கவிகளின் பெயர்களும் நூல்களின் பெயர்களும் இருப்பதைச் சிந்தனை செய்துவிட்டு, 'அந்த வித்வான் அந்த க்ரந்தம் எழுதியிருக்கிறார், இந்த பண்டிதர் இந்த நூல் இயற்றியிருக்கிறார்' என்று ப்ரஸங்கிப்பது; அதோடும் நில்லாமல் "கதாதரபட்டாசாருடைய பாண்டித்யம் பட்டோஜிதீக்ஷிதருக்கு வருமோ? முராரியின் பாணியே தனிப்பட்டது; பாஸ கவியின் சொல்நயம் வெகு அழகு" என்றிப்படி, ஏதோவொரு ஊரில் அச்வமேதம் நடத்துகின்றார்களாமே. அந்த விதமாகவும், அற்கும் மிகமிக மேலாகவும ஸ்வஸஜாதீயர்களிடத்திலே பேசி மயக்கப் பார்ப்பதுண்டு. அதேபோல் இவர் டங்கர் த்ரமிடர் குஹதேவர் போதாயநர் என்று சில வ்யக்திகளையும், பாஷ்யம் வ்ருத்தி என்று சில க்ரந்தங்களையும் பேசக் கற்றுவிட்டது ஆச்சரியம். அல்லது ஆச்சரியமன்று. இப்போது நமக்குக் கிடைக்காதனவும், கிடைக்க ப்ரஸக்தியில்லாதனவுமான நூல்களைப்பற்றியே பேசுகின்ற இவர் கிடைக்கின்ற சததூஷணீ தத்வ முக்தாகலாபாதிகளைப் பற்றிப் பேசுவதில் வியப்புத்தானுண்டோ? அமுதனாருக்கும் தேசிகருக்கும் ராமாநுஜர் விஷயத்தில் ஒரு வாசி காட்டுகிறார். இதை என்போல் வாரும் தெரிந்துகொள்ளும்படியாக இருவருடைய நூலகளிலிருந்தும் இரண்டொரு

வார்த்தைகளையாவது எடுத்துக்காட்டியிருந்தால் சுவையாய் இருக்கும். சத்ருக்னாழ்வான் பெருமாளிடத்தில் வைத்த பக்தியும், மதுரகவிகள் எம்பெருமானிடத்திலே வைத்த பக்தியும் போலே தேசிகரும் எம்பெருமானிடத்திலே ராமாநுஜர் தொழும் தெய்வமென்கிற காரணத்தினால் பக்தி வைத்திருந்தால் இதில் என்ன அதிசயம் கண்டாரோ இவர்? அமுதனார்படியும் இப்படித்தானே.

"ராமாநுஜர் கட்டிய மாளிகையில் தேசிகர் இரு விவாஹங்கள் நடத்தி வைத்தார் என்பது அடியோடு அர்த்தமில்லாத வார்த்தை. இதற்கு அடுத்த முன்னே இவர் எழுதியிருப்பதாவது ராமாநுஜ ஸித்தாந்தத்துக்கு தேசிகர் பண்ணிய மிகச் சிறந்தபணி திவ்ய தம்பதிகளே தத்வம் ஹிதம் புருஷார்த்த மென்ற கொள்கையை ஸ்தாபித்ததும் ஸம்ஸ்க்ருத வேதாந்தத்தையும் த்ரமிடோபநிஷத்தையும் ஒருங்கச் செய்ததும் என்றும். இதற்கும் எவ்விதமான அர்த்தமும் கிடையாது. வித்வான்கள் ஜரத்கவாதி வாக்யார்த்தம் என்பார்களே, அது இதுதான். முதலில் ஒன்று தெரிவிப்போம். இவர் ஏதோ தேசிகருக்குப் பெருமை தெரிவிப்பதாகவும் அதை நாம் மறுப்பதாகவும் அப்படி மறுப்பதானது த்வேஷத்தினுடையவும் அஸூயையினுடையவும் காரியமென்பதாகவும் இவர் பறைசாற்றுவர். உண்மையில் தேசிகருக்கு எந்த பெருமை சொன்னாலும் ஒக்கும் ஒக்கும்; ஏற்கும் ஏற்கும் என்னவேண்டுமே யொழிய அதை மறுப்பவர்கள் ஸ்ரீவைஷ்ணவர்களாகார். அர்த்தமில்லாதபடி தப்பும் தவறுமாக எழுதி வைத்தால் அதை மறுப்பது த்வேஷ கார்யமன்று, அஸூயாகார்யமன்று; லோகக்ஷேமத்திற்காகவாகும்.

"திவ்ய தம்பதிகளே தத்வம் ஹிதம் புருஷார்த்தம் என்ற கொள்கையை தேசிகர் ஸ்தாபித்தார்" என்றால் இதற்கு என்ன அர்த்தமையா! என்று சில விவேகிகள் இவரை நேரில் கேட்கலாகாதா? ஆளவந்தார் சதுச்ச்லோகியிலும், கூரத்தாழ்வான் ஸ்ரீஸ்தவத்திலும், பட்டர் ஸ்ரீகுணரத்ன கோசத்திலும் பொறித்து வைக்காத அர்த்தம் ஏதேனும் அபூர்வமாகவுண்டோ? உண்டென்னில் அது விபரீதமே யொழிய வேறல்ல. இல்லையெனில் வாய்மூடி நிற்பது. "அப்ரமேயம் ஹி தத் தேஜோ யஸ்ய ஸா ஜநகாத்மஜா" என்று மாரீசன் சொல்லிவைத்தானே. அதை விட அதிசயமாகச் சொல்லவல்லாருண்டோ? உடையவர் மாளிகை கட்டுவதற்கு முன்னமே திவ்ய தம்பதிகளின் விவாஹத்தை அந்த மாரீசனன்றோ அரண்யத்தில் மத்தளங்கொட்ட வரிசங்கம் நின்றூத முத்துடைத்தாமம் நிரைதாழ்ந்த பந்தற்கீழ் நடத்திவைத்தான். அதன் பிறகு ஆசார்யவர்க்கத்தில் பிள்ளான் நஞ்சீயர் பெரியவாச்சான் பிள்ளை தெள்ளார் வடக்குத் திருவீதிப் பிள்ளைகள் சீரும் சிறப்பும் பொலிய அந்த விவாஹத்தை நடத்திவைத்து உலகத்தை அந்த திவ்ய தம்பதிகளின் திருவடி நிழலிலே வாழ்வித்தருளி வருகிறார்கள். வேறுயாரோ நடத்தி வைத்ததாக இவர் சொல்லுகிற விவாஹம் எத்தகைத்தென்றால், தென்னாட்டில் சில ஊர்களில் உத்தராயணத் தொடக்கத்தில் மனைதோறும் பெண்டிர்கள் குழாங்கூடி "காக்காப்பிடிவெச்சேன் கன்னிப்பிடிவெச்சேன்—காக்கைக்கும் குருவிக்கும் கல்யாணம்" என்று சொல்லி விவாஹமொன்று நடத்துவதுண்டு; அதுபோன்றதே. ஆனால் அது உடையவர் கட்டின மாளிகையில் நடக்க ப்ரஸக்தியே கிடையாது.

இனி இரண்டாவது விவாஹத்தின் விமர்சனம்—"ஸம்ஸ்க்ருத வேதாந்தத்தையும் த்ரமிடோபநிஷத்தையும் ஒருங்கச் செய்தது" என்றும், "ஸம்ஸ்க்ருத வேதங்களையும் தமிழ் வேதங்களையும் நாடறிய ஒன்றுபடுத்தினர்" என்றும் எழுதியிருப்பவை 'ஸ்வயமபிலிகிதம் ஸ்வயம் நஜாநாதி'யில் சேர்ந்தவையாம். உபயவேதங்களுக்கும் விவாஹம் செய்வதென்றால் என்ன? என்று கேட்டால் ஒன்று சொல்லியாக வேண்டும். "செய்ய தமிழ் மாலைகள் நாம் தெளிய வோதித் தெளியாத மறைநிலங்கள் தெளிகின்றோமே" என்று சொன்னவராகச் சொல்லப்படுகையாலே

வடமொழி வேதாந்தத்தில் கலக்கமாகக் காணும் பொருள்களைத் தென்மொழி வேதாந்தமான திவ்யப்ரபந்தங்களினால் தெளியவைப்பதுதான் மேலே குறித்த விவாஹமென்று இவர் சொல்லவேணும். இங்கு உண்மையென்னவென்றால் செய்ய தமிழ் மாலைகள் நாமித்யாதி பாசுரம் ப்ரதிஜ்ஞா மாத்ரமேயொழிய ஓரிடத்திலும் அணுவளவும் நிரூபணம் கிடையாது. உண்டாகில் தாராளமாக எடுத்துக்காட்டலாம்.

அமலனாதிபிரானைப் பற்றிச் சொல்லும்போது "பாண்பெருமாள் பாடியதோர் பாடல் பத்தும் பழமறையின் பொருளென்று பரவுமின்கள்" என்று வடமொழி வேதாந்தமே அமலனாதிபிரானாக வடிவெடுத்திருக்கிறதென்றார். நாலாயிரத்தினுள் அமலனாதிபிரானொன்றுக்கு மட்டுமே இவ்வாசிரியர் வியாக்கியானம் செய்தருளியுள்ளார். பழமறையின் பொருளென்று பரவுமின்களென்றவர் பழமறையினின்று ஒரு பொருளையாவது எடுத்துக்காட்டியிருக்க வேண்டாமா? ஏற்கெனவே அவதரித்துள்ள வியாக்கியானங்களில் இல்லாத பொருள் ஒன்று உண்டா? கோபதாபங்களை விட்டொழித்து நாலைந்து பொருள்களையாவது எடுத்துக்காட்டி மகிழ்விக்க முடியுமா! அதற்கிவர் பிறக்கவில்லையே. சில அசடுகளைச் சேர்த்துக்கொண்டு கண்ணநீர் பெருக்கப் பிறந்தாரத்தனை. அருளிச்செயற்கடலிலிருந்து அமுதவெள்ளமான எத்தனையர்த்த விசேஷங்களை ஆறாயிரப்படியிலும் இருபத்து நாலாயிரப்படியிலும் முப்பத்தாறாயிரப் படியிலும் கொள்ளை கொள்ளையாக அநுபவிக்கிறோம்! அப்படி ஓரர்த்தமாவது காட்டிற்றுண்டோ? ஸச்சரித்ரரக்ஷையில் 'கரியமேனிமிசை வெளியநீறு சிறிதேயிடும்" என்கிற திருவாய்மொழிப் பாசுரத்தை யெடுத்துப் பொருள் சொல்ல நேர்ந்தது. ஆறாயிரப்படியைத் தள்ளி நம்பிள்ளை திருவடிகளின் வியாக்கியானத்தில் கண்ட பொருளையே விவரித்து "இப்படி ஆசாரியர்கள் அருளிச்செய்கிறார்கள்" என்று முடிக்கப்பட்டிருக்கிறது. இப்படி பத்தெட்டு விவாஹங்களை நடத்தியிருக்கிறாரென்பது வாஸ்தவம். இந்த விவாஹங்கள் நம்பிள்ளை கட்டின மாளிகையிலன்றோ நடத்தியவை,

"உபய வேதாந்த ஸித்தாந்தத்தை தேசிகர் தாம் ஆரம்பித்து வைத்ததாக கர்வப்படவில்லை" என்கிற வார்த்தையும் அர்த்தமற்றது. உண்மையில் அவர் ஆரம்பித்து வைத்ததாயிருந்தாலன்றோ கர்வப்பட ப்ரஸக்தியுள்ளது. கர்வப்பட்டாலும் குற்றமில்லை. திருவாய்மொழியில் * குரவையாச்சியரோடு பதிகத்தில் பின்னடிகளெல்லாம் கர்வமே வடிவெடுத்தவை. அமுதனார் போல்வார் "எனக்காரும் நிகரில்லையே" என்பது முதலான பாசுரங்களால் கர்வம் காட்டியிருப்பதில் குறை கூறுவாருண்டோ?" உபய வேதாந்த ஸித்தாந்தத்தை ஆரம்பித்து வைப்பதென்றால் என்ன ஐயா! இவர் உபயவேதாந்தஸித்தாந்தமென்பதற்கும் ஒரு அர்த்தம் கிடையாதே. இதைப்பற்றின மருமங்கள் குருகுலக்லிஷ்டர்களுக்குத் தெரியுமேயொழிய "லவண வணிஜ:" இத்யாதி யதிராஜஸப்ததிஸூக்தி லக்ஷ்யபூதர்கள் இத்தகைய விஷயங்களில் எழுதப்புகுவது விரலுக்குத் தகாத வீக்கம் என்னத்தகுமத்தனை. இன்ன பெருமைக்கு இன்னாரிலக்கு என்பதறியாதே அர்த்தமில்லாதபடி காடுபாய்ந்தெழுதப்புகுவது அபஹாஸ்யமென்று அறியக்கடவது. அபார வாக்சாதுர்ய ஸம்பத்திலும் ஸர்வஜ்ஞரென்னும்படியான வித்வத்திலும் குறைகூறுவார் ஆரேனுமுளரோ? "மாசூணா வான் கோலத் தமரர்கோன் வழிப்பட்டால் மாசூணாவுனபாத மலர்ச்சோதி மழுங்காதே" என்ற கணக்கிலே அநதிகாரிகள் வாய் வைப்பதும் கை வைப்பதும் தகாது தகாது தகாது. அத்வைதிகள் பகவத் ராமாநுஜரைப் புகழ்வதோடும், த்வைதிகள் சங்கராசாரியரைப் புகழ்வதோடு மொக்கும் இவர் செய்கிற புகழ்ச்சியெல்லாம் என்பது சிலாசாஸனமாய் நிற்கும். தேசிகரைப்பற்றிப் பேச தேசிகரே அதிகாரி." ஆக இவ்வளவும் ஸ்ரீவில்லிபுத்தூர் ஸ்வாமியின் விடையளிப்பு.

**ஸ்ரீவைஷ்ணவ ஸமாராதனம் முற்றிற்று.**

பருவரங்களவைபற்றிப் படையாலித்தெழுந்தானை *
செருவரங்கப்பொருதழித்த திருவாளன்திருப்பதிமேல் *
திருவரங்கத்தமிழ்மாலை விட்டுசித்தன்விரித்தனகொண்டு *
இருவரங்கமெரித்தானை யேத்தவல்லாரடியோமே. (10)

* * *—பிரமன் முதலியோரிடத்துப்பெற்ற பெரியவரங்களைப் பெலமாகக் கொண்டு யுத்தவிஷயமாகக் கோலாஹலஞ் செய்து வெளிப்புறப்பட்ட இராவணனை யுத்தத்திலே ஒழியும்படி போர்செய்து ஒழித்தருளின (வீர்யமாகிற) லக்ஷ்மியைத் தனக்கு நிரூபகமாக உடையனான எம்பெருமானுடைய திருவரங்கமென்னும் திருப்பதி விஷயமாகப் பெரியாழ்வார் அருளிச்செய்த இப்பத்துப் பாசுரங்களையுங் கொண்டு, மதுகைடபர்களாகிற இருவருடைய உடலைத் (திருவனந்தாழ்வானுடைய மூச்சு வெப்பத்தினால்) கொளுத்திப் போகட்ட ஸ்ரீரங்கநாதனைத் துதிக்க வல்லவர்களுக்கு அடிமை செய்யக்கடவோம். ... ... ... (10)

அடி வரவு :

மாதவ பிறப்பு மருமகன் கூன் பெரு கீழ் கொழுப்பு வல்லெயிறு குன்று பரு மரவடி.

ஆழ்வாரெம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்.

---

## நான்காம்பத்து—ஒன்பதாந்திருமொழி—மரவடியை

இதுவும் திருவரங்கப் பதிகம் (2)

**மரவடியைத்தம்பிக்கு வான்பணயம்வைத்துப்போய்வானோர்வாழ *
செருவுடையதிசைக்கருமம் திருத்திவந்துலகாண்ட திருமால்கோயில் *
திருவடிதன்திருவுருவும் திருமங்கைமலர்கண்ணுங்காட்டிநின்ற *
உருவுடையமலர்நீலங் காற்றுட்டவோசலிக்குமொளியரங்கமே. 1

* * *—சித்திரகூடத்தில் வந்து ப்ரபத்தி பண்ணின பரதாழ்வானுக்கு ஸ்ரீபாதுகைகளை நன்றாக நம்புகைக்கு உரிய அடகாக அளித்து, தேவர்கள் வாழும்படி (சித்திரகூடத்தைவிட்டு அவ்வருகே) எழுந்தருளி யுத்தத்துக்கு உரிய தெற்குத் திக்கில் செய்யவேண்டிய காரியங்களைக் குறையறச்செய்து முடித்துவிட்டுப் பிராட்டியுடன் அயோத்திக்கு எழுந்தருளி ராஜ்யபரிபாலநம் செய்தருளின திருமால் எழுந்தருளியிருக்கிற கோயிலாவது; ஸர்வஸ்வாமியான பெரிய பெருமாளுடைய திருமேனி நிறத்தையும் பெரியபிராட்டியாருடைய மலர்ந்த திருக்கண்களின் நிறத்தையும் பிரகாசிப்பியா நின்ற அழகு பொருந்திய கருநெய்தற் பூக்களானவை காற்று அசைக்க அசைந்து கொண்டிருக்கப்பெற்ற ஒளியையுடைய திருவரங்கமாம். (1)

**தன்னடியார்திறத்தகத்துத் தாமரையாளாகிலுஞ்சிதகுரைக்குமேல் *
என்னடியாரதுசெய்யார் செய்தாரேல்நன்றுசெய்தாரென்பர்போலும் *
மன்னுடையவிபீடணற்கா மதிலிலங்கைத்திசைநோக்கிமலர்கண்வைத்த *
என்னுடையதிருவரங்கற்கன்றியும் மற்றொருவர்க்காளாவரே. 2

* * *—தன்னுடைய [எம்பெருமானுடைய] அடியவர்கள் விஷயத்தில் புரு காரம் பண்ணக்கடவளான பெரிய பிராட்டியார் தாமே குற்றங்களைக் கணக்கிட்டுச் சொல்லத் தொடங்கினாலும் "எனக்கு அடிமைப்பட்டவர்கள் அக்குற்றங்களைச் செய்யமாட்டார்கள்; செய்த குற்றத்தைப் பொறுப்பதற்கு எம்பெருமானுண்டு என்று சில்வற்றைச் செய்தார்களாயினும் அவர்கள் நன்மையையே செய்தார்களத்தனை" என்று சொல்லா நிற்பவரும், ஐச்வரியம் பொருந்திய விபீஷணாழ்வானுக்காக மதிளையுடைய லங்கையின் முகமாக மலர்ந்த திருக்கண்களை வைத்தருளினவரும் எனக்கு ஸ்வாமியுமான பெரியபெருமாளை யொழிய வேறொருவர்க்கு ஆட்படுவார் ஆரேனுமுண்டோ. [பெரிய பெருமாளுக்கே ஆட்படுவ ரென்றவாறு.] ... (2)

கருளுடையபொழில்மருதுங் கதக்களிறும்பிலம்பனையுங்கடியமாவும் *
உருளுடையசகடினையும் மல்லரையுமுடையவிட்டோசைகேட்டான் *
இருளகற்றுமெறிகதிரோன் மண்டலத்தூடேற்றிவைத்தேணிவாங்கி *
அருள்கொடுத்திட்டடியவரை ஆட்கொள்வானமருமூரணியரங்கமே. 3

* * *—கிருஷ்ணனை நலியவேணும் என்கிற சீற்றத்தையுடையதும் மனமிழப்புண்ணும்படி புறம்பே சோலைசெய்து நிற்பதுமான இரட்டை மருதமரங்களையும், மிக்க கோபத்தையுடைய குவலயாபீடத்தையும் ப்ரலம்பாஸுரனையும் மிகவும் க்ரூரனான குதிரை வடிவாய்வந்த கேசியையும், உருண்டுவந்த சகடாஸுரனையும் மல்லர்களையும் நிரஸித்தருளிக் கீர்த்திபெற்றவனும், இருளைப் போக்காநின்று வீசுகின்ற கிரணங்களையுடையனான ஸூர்யனுடைய மண்டலத்தினுள்ளே அடியார்களை ஏறச்செய்து (அங்கு நின்றும் அர்ச்சிராதி மார்க்கமாய்ப் பரமபதத்திற்குக் கொண்டுபோய்) அங்கு அவர்களை நிறுத்தித் தன்னுடையதான உபாயத்வாகாரத்தைத் தவிர்த்து அவர்கள் அவ்விடத்தில் நின்றும் மீளாமைக்கும் கைங்கரியலாபத்திற்குமுறுப்பாக அவர்கள் பக்கல் க்ருபைபண்ணி அடிமை கொள்ளுமவனுமான எம்பெருமான் பொருந்தி எழுந்தருளியிருக்கிற திருப்பதியாவது அழகிய திருவரங்கமாம். (3)

பதினாறுமாயிரவர் தேவிமார்பணிசெய்யத்துவரையென்னு
மதில் * நாயகராகிவீற்றிருந்த மணவாளர்மன்னுகோயில் *
புதுநாண்மலர்க்கமலம் எம்பெருமான்பொன்வயிற்றிற்பூவேபோல்வான் *
பொதுநாயகம்பாவித்திறுமாந்து பொற்சாய்க்கும்புனலரங்கமே. 4

* * *—ஸ்ரீ த்வாரகையென்கிற பட்டணத்தில் பதினாறுயிரம் தேவிமார் கைங்கரியம் பண்ண, அவர்களுக்கு நாயகராய்க் கொண்டு அவர்களின் நடுவே எழுந்தருளியிருந்த மணவாளப்பிள்ளை அழகிய மணவாளப் பெருமாளாய் நித்தியவாஸம் பண்ணுகிற கோயிலாவது, அப்போதலர்ந்த செவ்வித் தாமரைப்பூவானது எம்பெருமானுடைய அழகிய திருநாபியிலுள்ள தாமரைப்பூவோடு ஸாம்யம் பெறுவதற்காக ஸர்வநிர்வாஹகத்வத்தைப் பாவித்து அப்பாவனையாலே கர்வங்கொண்டு மற்ற தாமரைகளின் அழகைத்தள்ளிவிடா நின்றுள்ள நீர்வளம் மிக்க திருவரங்கமாம் (4)

ஆமையாய்க்கங்கையாய் ஆழ்கடலாயவனியாயருவரைகளாய் *
நான்முகனாய்நான்மறையாய் வேள்வியாய்த்தக்கணையாய்த்தானுமானான் *
சேமமுடைநாரதனார் சென்றுசென்றுதுதித்திறைஞ்சக்கிடந்தான்கோயில் *
பூமருவிப்புள்ளினங்கள்புள்ளரையன் புகழ்குழறும்புனலரங்கமே. 5

* *—ஸ்ரீ நாரத மஹர்ஷிக்குத் தன்னுடைய ஸர்வாதிகத்துவத்தை விளங்கச் செய்வதற்காக முதலில் கங்காஜலத்துள் ஆமையாயும் பின்பு அந்த ஆமை முதலிய ஜந்துக்களுக்கு இருப்பிடமான கங்கையாயும் பின்பு அக்கங்கை முதலிய நதிகளுக்குப் புகலிடமான ஆழ்ந்த கடலாயும் பின்பு அக்கடலுக்கு இருப்பிடமான பூமியாயும் பின்பு அப்பூமிக்கு ஆதாரமான பெரிய மலைகளாயும் பின்பு அம்மலைகளுக்கு ஸ்ருஷ்டிகர்த்தாவான சதுர்முகனுயும் பின்பு அச்சதுர்முகனுக்குத் தாரகமான நான்கு வேதங்களையும் பின்பு வேதங்களுக்குப் பராயணமான யாகங்களாயும் பின்பு அந்த யாகங்களுக்கு வீர்யத்தைக் கொடுக்கவல்ல தக்ஷிணையாகவும் அந்தத் தக்ஷிணுமுகமாக அனைவர்க்கும் அவரவர்கள் விரும்பின பலத்தைக் கொடுக்கவல்ல அஸாதாரண விக்ரஹ விசிஷ்டனுன தானுகவுமாகி, இங்ஙனே நாரதபகவான் பல காலும் எழுந்தருளி ஸ்தோத்திரம்பண்ணி வணங்கும்படி பள்ளிகொண்டருளு மெம்பெருமானுடைய கோயிலாவது, அன்னம் முதலிய பறவைக்கூட்டங்கள் நீர்ப்பூ முதலிய பூக்களில் பொருந்தியிருந்து தங்கள் சாதிக்குத் தலைவனுன பெரிய திருவடியினுடைய கீர்த்தியை அநக்ஷரரஸமாகப் பேசாநிற்கப் பெற்றதும் நீர்வளத்தையுடையதுமான திருவரங்கமாம். [இப்பாட்டில் அனுசந்தித்த இதிஹாஸம் ஹரிவம்சத்திலுள்ளது.] ... .... .... ... ... (5)

மைத்துனன்மார்காதலியை மயிர்முடிப்பித்தவர்களையேமன்னராக்கி *
உத்தரைதன்சிறுவனையும் உய்யக்கொண்டவுயிராளனுறையுங்கோயில் *
பத்தர்களும் பகவர்களும் பழமொழிவாய்முனிவர்களும்பரந்தநாடும் *
சித்தர்களுந்தொழுதிறைஞ்சத் திசைவிளக்காய்நிற்கின்றதிருவரங்கமே. 6

* * *—தனது மைத்துனன்மாரான பாண்டவர்களுடைய பத்நியாகிய த்ரௌபதியை விரித்த கூந்தலை முடியும்படி செய்தருளி அப்பாண்டவர்களையே அரசாள்வித்தருளியவனும் அபிமன்யுவின் மனைவியான உத்தரை என்பவளுடைய மகனுன (கருவிற் கரிக்கட்டையா யொழிந்த) பரிக்ஷித்தை உயிர் பெற்றெழுந்திருக்கும்படி செய்தருளியவனும் எல்லா உயிர்கட்கும் தலைவனுமான எம்பெருமான் எழுந்தருளியிருக்கிற கோயிலாவது, பக்தர்களும் ஸந்நியாசிகளும் வேதம்வல்ல ரிஷிகளும் நாட்டிலுள்ள மற்றும் பலரும் நித்திய முக்தர்களும் அஞ்சலி பண்ணி வணங்கும்படி எல்லாத் திக்குகளுக்கும் விளக்காயிருக்கிற திருவரங்க நகராம். (6)

குறட்பிரமசாரியாய் மாவலியைக்குறும்பதக்கியரசுவாங்கி *
இறைப்பொழுதிற்பாதாளங் கலவிருக்கைகொடுத்துகந்தவெம்மான்கோயில் *
எறிப்புடைமணிவரைமேல் இளஞாயிறெழுந்தாற் போலரவணையின்வாய் *
சிறப்புடையபணங்கள்மிசைச் செழுமணிகள்விட்டெறிக்குந்திருவரங்கமே. 7

* * *—வாமந ப்ரஹ்மசாரியா யெழுந்தருளி மஹாபலியினுடைய செருக்கை அடக்கி அவனுடைய ராஜ்யமாயிருந்த பூமியைத் தன்னுடையதாம்படி நீரேற்றுப் பெற்று க்ஷணகாலத்துக்குள் பாதாளலோகத்தை அவனுக்கு இருப்பிடமாகக் கற்பித்து மகிழ்ந்த எம்பெருமான் எழுந்தருளி யிருக்கிற கோயிலாவது, மிக்க ஒளியையுடைய நீலரத்ன பர்வதத்தின்மேல் பால ஸௌரியர்கள் உதித்தாற்போலத் திருவனந்தாழ்வானிடத்து அழகு பொருந்திய படங்களின்மேல் செழுமை தங்கிய ரத்னங்கள் மிகவும் ஜ்வலியா நிற்கப்பெற்ற திருவரங்கமாம். .... .... ... (7)

உரம்பற்றியிரணியனை உகிர்நுதியாலொள்ளியமார்புறைக்கவூன்றி *
சிரம்பற்றிமுடியிடியக்கண்பிதுங்க வாயலறத்தெழித்தான்கோயில் *
உரம்பெற்றமலர்க்கமலம் உலகளந்தசேவடிபோலுயர்ந்துகாட்ட *
வரம்புற்றகதிர்ச்செந்நெல் தாள்சாய்த்துத்தலைவணக்குந்தண்ணரங்கமே.

* * *—தன்னுடைய வலிவை நினைத்துச் செருக்குற்ற இரணியனுடைய அழகிய மார்பை நகங்களின் நுனிகள் உள்ளே பொத்தும்படி திருக்கைகளால் பற்றிக் கொண்டு அவனது தலையிலுள்ள கிரீடம் பொடி படும்படியாகவும் கண்கள் பிதுங்கும்படியாகவும் வேதனை பொறுக்கமாட்டாமல் வாய் விரியும்படியாகவும் தலையைப் பிடித்து நெரித்து (பிரஹ்லாதனுடைய விரோதியை முடித்தோமென்னும் மகிழ்ச்சியினால்) ஆரவாரம் செய்தருளின எம்பெருமான் எழுந்தருளியிருக்கிற கோயிலாவது, செழிப்புப் பொருந்திய தாமரை மலர்கள் மேலுலகை அளப்பதாக உயர்ந்த திருவடியைப்போல் உயர வளர்ந்து விளங்க, வரம்பு சேர்ந்து விளைந்து நிற்பதும் கதிரையுடையதுமான செந்நெலானது தாள்களை நீட்டித் தலைவணங்கி நிற்கப்பெற்றதுமான குளிர்ந்த திருவரங்க நகராம். (உரம் - வலிவு.) .... .... (௮)

தேவுடையமீனமாயாமையாயேனமாய் அரியாய்க்குறளாய் *
மூவுருவினிராமனாய்க் கண்ணனாய்க்கற்கியாய்முடிப்பான்கோயில் *
சேவலொடுபெடையன்னஞ் செங்கமலமலரேறியூசலாடி *
பூவணைமேல்துதைந்தெழு செம்பொடியாடிவிளையாடும்புனலரங்கமே. 9

* * *—தெய்வத்தன்மை வாய்ந்த மத்ஸ்யமாயும் கூர்மமாயும் வராஹமாயும் நரஸிம்ஹமாயும் வாமநனாயும் பரசுராமனாயும் தசரதராமனாயும் பலராமனாயும் ஸ்ரீ கிருஷ்ணனாயும் கல்கியாயும் திருவவதாரங்களெடுத்து விரோதிகளை ஒழிக்க வல்ல எம்பெருமான் எழுந்தருளியிருக்கிற கோயிலாவது; அன்னப்பேடை தனது புருஷ ஹம்ஸத்தோடுகூடச் செந்தாமரைப் பூவின்மேலேறி அம்மலரை அசைத்து ஊசலாடிப் புஷ்ப சயநத்தின்மேல் நெருக்கத்தைச் செய்து அதனால் கிளர்ந்த சுண்ணமாகிற சிவந்த பொடியில் மூழ்கி விளையாடா நிற்கப்பெற்ற நீர்வளத்தையுடைய திருவரங்க நகராம். .... .... ... ... (9)

செருவாளும்புள்ளாளன்மண்ணாளன் செருச்செய்யுநாந்தகமென்னு
மொருவாளன் * மறையாளனோடாதபடையாளன் விழுக்கையாளன் *
இரவாளன்பகலாளனென்னையாளன் ஏழுலகப்பெரும்புரவாளன் *
திருவாளனினிதாகத் திருக்கண்கள்வளர்கின்றதிருவரங்கமே. 10

* * *—தானே போர் செய்யவல்ல பெரிய திருவடிக்குத் தலைவனும், லீலா விபூதியை ஆளுமவனும், ஆச்ரித விரோதிகளை எதிர்த்துப் பூசல் செய்யவல்ல நந்தகம் என்கிற ஒப்பற்றதொரு கொற்றவாளை யுடையனும், நான்கு வேதங்களையும் ஆளுமவனும், போர்க்களத்தில் முதுகுகாட்டி யோடாத ஸேனைகளை யுடையவனும், சிறந்த ஔதார்ய முடையனும், இரவு பகற்போதுகளுக்கு நியாமகனும், அடியேனுக்குத் தலைவனும் ஸப்தலோகங்களாகிற பெரிய க்ஷேத்திரங்களை ஆளுமவனும், பெரிய பிராட்டியாரைத் தேவியாக ஆளுமவனுமான எம்பெருமான் திருவுள்ளமுவந்து திருக்கண் வளர்ந்தருளுகிற கோயிலாவது; திருவரங்க நகராம். (10)

கைந்நாகத்திடர்கடிந்த கனலாழிப்படையுடையான்கருதுங்கோயில் *
தென்னாடும்வடநாடுந்தொழநின்ற திருவரங்கந்திருப்பதியின்மேல் *
மெய்ந்நாவன்மெய்யடியான்விட்டுசித்தன் விரித்ததமிழுரைக்கவல்லார் *
எஞ்ஞான்றுமெம்பெருமானிணையடிக்கீழ் இணைபிரியாதிருப்பர்தாமே. 11

***—கஜேந்திராழ்வானுடைய துன்பத்தைப் போக்கின சக்கரபாணி யெம்பெருமான் விரும்பி யெழுந்தருளியிருக்கப்பெற்ற கோயிலாய், தென்னாட்டிலுள்ளாரும் வடநாட்டிலுள்ளாரும் ஸேவிக்கும்படி அமைந்த திருவரங்கமென்னும் திருப்பதி விஷயமாக, மெய்யே சொல்லாநின்ற நாவை யுடையரும் பிரயோஜனத்தை விரும்பாது அடிமை செய்பவருமான பெரியாழ்வார் அருளிச்செய்த இத்தமிழ்ப் பாசுரங்களை ஓதவல்லவர்கள் எம்பெருமானது திருவடிகளின் கீழ் எந்நாளும் நித்ய முக்தர்களின் திரளாகிற துணையைப் பிரியாமல் கூடி வாழ்ந்திருக்கப் பெறுவர். ... (11)

அடிவரவு: மரவடி தன் கருள் பதினாறு ஆமை மைத்துனன் குறள் உரம் தேவு செருகைந்நாகத் துப்பு.

ஆழ்வாரெம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்.

---

## பெரியாழ்வார் திருமொழி—நான்காம்பத்து—பத்தாந்திருமொழி—துப்புடையாரை

(சரமகாலத்தில் வருத்தமொன்றும் நேராமைக்காக இப்போதே அரங்கனைத் துதிக்கின்றேனென்றல்)

**துப்புடையாரையடைவதெல்லாம் சோர்விடத்துத்துணையாவரென்றே *
ஒப்பிலேனாகிலும்நின்னடைந்தேன் ஆனைக்குநீயருள்செய்தமையால் *
எய்ப்பென்னைவந்துநலியும்போது அங்கேதுநானுன்னைநினைக்கமாட்டேன் *
அப்போதைக்கிப்போதேசொல்லிவைத்தேன்அரங்கத்தரவணைப்பள்ளியானே.1

***—திருவரங்கம் பெரிய கோயிலில் திருவனந்தாழ்வானென்கிற படுக்கையின்மேல் பள்ளிகொள்ளா நின்றுள்ள எம்பெருமானே! அடியாரைக் காப்பதில் ஸாமர்த்தியமுடைய தேவரீரை ஆச்ரயிப்பது 'ஸர்கல இந்திரியங்களும் சிதிலமாய் விடுங்காலத்தில் தேவரீர் துணையாயிருக்கும்,' என்கிற எண்ணத்தினாலன்றோ? இவ்வாறு துணை செய்வதற்கு உரிய அதிகாரிகள் இன்னாரென்று தேவரீர் திருவுள்ளத்திற் கொண்டிருக்குமவர்களோடு அடியேன் ஒப்பற்றவனாயினும் தேவரீர் கஜேந்திராழ்வானைக் காத்தருளியவராதலால் அவரைப்போல் அடியேனையுங் காத்தருள்வீரென்று தேவரீரைச் சரணம் புகுந்தேன்; வாதபித்த ச்லேஷ்மங்களினால் நெருக்குண்கையாலுண்டாகக் கடவதான இளைப்பானது அடியேனைக் கிட்டி வருத்துங்காலமாகிற அந்த சரமதசையில் அடியேன் தேவரீரை க்ஷணகாலமாயினும் நினைக்க முடியாதவனாவேன். அக்காலத்துக்காக, கரணகளேபரங்கள் தெளிவு பெற்றிருக்கிற இப்போதே என்னுடைய பிரார்த்தனையை விண்ணப்பஞ் செய்து கொண்டேன். ... (1)

சாமிடத்தென்னைக்குறிக்கொள்கண்டாய் சங்கொடுசக்கரமேந்தினனே *
நாமடித்தென்னையனேகதண்டஞ் செய்வதாநிற்பர்நமன்றமர்கள் *
போமிடத்துன்திறத்தெத்தனையும் புகாவண்ணம்நிற்பதோர்மாயைவல்லை *
ஆமிடத்தேயுன்னைச்சொல்லிவைத்தேன் அரங்கத்தரவணைப்பள்ளியானே. 2

* * *—சங்கசக்ரபாணியான ஸ்ரீரங்கநாதனே!, யமபடர்கள் மிக்க கோபத்தோடு நாக்கை மடித்துக்கொண்டு மஹா பாபியான அடியேனைப் பல வகைகளால் தண்டிக்க நினையாநின்றவர்களாய் இழுத்துக்கொண்டு போம்போது என்னுடைய நெஞ்சானது உன் விஷயத்தில் சிறிதாயினும் அவகாஹிக்கமாட்டாமல் நிற்கையாகிற ஒப்பற்றதொரு மாயையைச் செய்வதில் நீ வல்லவனு யிரா நின்ருய்; ஆதலால் ஸர்வேந்திரியங்களும் தெளிவு பெற்றிருக்கப்பெற்ற இக்காலத்திலேயே சரீரவியோக ஸமயத்தில் உன்னை நினைக்கமாட்டாத அடியேனைத் திருவுள்ளம்பற்றியருள வேணும் என்று உன்னைக் குறித்து விண்ணப்பஞ் செய்து கொண்டேன். ... (2)

எல்லையில்வாசல்குறுகச்சென்ருல் எற்றிநமன்றமர்பற்றும்போது *
நில்லுமினென்னுமுபாயமில்லை நேமியுஞ்சங்கமுமேந்தினனே *
சொல்லலாம்போதேயுன்நாமமெல்லாம் சொல்லினேனென்னைக்
[குறிக்கொண்டென்றும் *
அல்லல்படாவண்ணங்காக்கவேண்டும் அரங்கத்தரவணைப்பள்ளியானே. 3

* * *—சங்கசக்ரபாணியான ஸ்ரீரங்கநாதனே!, அடியேனுடைய வாழ்நாளின் எல்லையாகிய சரமதசையில் யமபுரத்துக்குப் போம்வழியைக் கிட்டப்புகுந்தால் யமகிங்கரர்கள் அடித்துப் பிடிக்குங் காலத்தில் கடக்க நில்லுங்கள் என்று அவர்களைக் கிட்ட வரவொட்டாமல் தடுக்கும்படியான ஒருபாயமும் என் கையில் இல்லை; ஆதலால், வாய்விட்டுச் சொல்லுகைக்கு உரிய இப்போதே உன்னுடைய திருநாமங்களை யெல்லாம் சொன்னேன்; அடியேனைத் திருவுள்ளத்திற்கொண்டு எப்போதும் அநர்த்தப்படாதபடி ரக்ஷித்தருளவேணும். ... ... (3)

ஒற்றைவிடையனும்நான்முகனும் உன்னையறியாப்பெருமையோனே *
முற்றவுலகெல்லாம்நீயேயாகி மூன்றெழுத்தாயமுதல்வனேயோ *
அற்றதுவாணளிவற்கென்றெண்ணி அஞ்சநமன்றமர்பற்றலுற்ற *
அற்றைக்குநீயென்னைக்காக்கவேண்டும் அரங்கத்தரவணைப்பள்ளியானே. 4

* * *—ஒப்பற்ற ரிஷபவாஹநனுன ருத்ரனும் பிரமனும் உன்னை உள்ளபடி அறியவொண்ணுத பெருமை பொருந்தியவனே! ஒன்ருெழியாதபடி எல்லா உலகங்களும் நீயேயாய் மூன்று அக்ஷரமான பிரணவ ஸ்வரூபியானவனும் ஸர்வ காரணபூதனுமான ஸ்ரீரங்கநாதனே!, யமகிங்கரர்கள் 'இவனுக்கு ஆயுஸ்ஸு முடிந்தது' என்று நினைத்து, பிடிக்கிற பிடியில் அஞ்சும்படி பிடிக்கப் புகுகிற அன்றைக்கு நீ என்னைக் காக்கவேண்டும். ... ... ... (4)

பையரவினணைப்பாற்கடலுள் பள்ளிகொள்கின்றபரமமூர்த்தி *
உய்யவுலகுபடைக்கவேண்டி உந்தியில்தோற்றினுய்நான்முகனை *
வையமனிசரைப்பொய்யென்றெண்ணிக் காலனையுமுடனேபடைத்தாய் *
ஐயவினியென்னைக்காக்கவேண்டும் அரங்கத்தரவணைப்பள்ளியானே. 5

* * *—திருப்பாற்கடலில் சேஷசாயியான ஸ்வாமி!, எல்லா வுயிர்களும் ...ணையடைந்து உஜ்ஜீவிக்கும்படி லோகங்களை ஸ்ருஷ்டிக்க விரும்பித் திருநாபிக் ...லத்தில் பிரமனைத் தோற்றுவித்தவனே! பூமியிலுள்ள மநுஷ்யர்கள் நமது ...டளையாகிய சாஸ்த்ர மரியாதையில் நிற்கமாட்டாது க்ருத்ரிமராய் நடப்பவர்க ...ன்று நினைத்து அந்த விபரீதாசரணத்துக்குத் தக்க தண்டம் நடத்துதற்காக ...னையும் கூடவே ஸ்ருஷ்டித்தருளினவனே! பரமபந்துவானவனே! ஸ்ரீரங்க ...தனே! இனி என்னைக் காக்கவேண்டும். ... ... (5)

தண்ணனவில்லைநமன்றமர்கள் சாலக்கொடுமைகள்செய்யாநிற்பர் *
மண்ணொடுநீருமெரியுங்காலும் மற்றுமாகாசமுமாகிநின்றாய் *
எண்ணலாம்போதேயுன்நாமமெல்லாம் எண்ணினேனென்னைக் [குறிக்கொண்டென்றும் *
அண்ணலேநீயென்னைக்காக்கவேண்டும் அரங்கத்தரவணைப்பள்ளியானே.6

* * *—பஞ்ச பூதங்களும் மற்றுமுள்ள பதார்த்தங்களுமாய் நிற்பவனே! ...வ ஸ்வாமியானவனே! யமகிங்கரர்கள் இரக்கமற்றவர்களாய்க் கொண்டு ...வும் கொடிய சிக்ஷைகளைப் பண்ணுவர்கள்; அப்படிப்பட்ட சிக்ஷைகளுக்கு ...ளாகாதொழியும்படி, அநுஸந்திக்கைக்கு உரிய காலத்திலேயே உன்னுடைய ...நாமங்களை யெல்லாம் அநுஸந்தித்தேன்; அடியேனை நீ திருவுள்ளத்திற் ...ாண்டு எப்போதும் ரக்ஷித்தருளவேணும். .... ... (6)

செஞ்சொல்மறைப்பொருளாகிநின்ற தேவர்கள்நாயகனேயெம்மானே *
எஞ்சலிலென்னுடையின்னமுதே யேழுலகுமுடையாயென்னப்பா *
வஞ்சவுருவின்நமன்றமர்கள் வலிந்துநலிந்தென்னைப்பற்றும்போது *
அஞ்சலமென்றென்னைக்காக்கவேண்டும் அரங்கத்தரவணைப்பள்ளியானே.7

* * *—ருஜுவான சொற்களையுடைய வேதத்துக்கு அர்த்தமாயிருப்பவனும் ...ய ஸூரிகளுக்குத் தலைவனுமான பெருமானே! எனக்குக் குறைவற்ற பரம ...க்யமான அம்ருதம் போன்றவனே! உலகங்களுக்கெல்லாம் ஸ்வாமியானவனே! ...க்கு உபகாரகனானவனே! வஞ்சனை பொருந்திய ரூபத்தையுடையரான யமகிங் ...ர்கள் அடியேனைப் பலாத்கரித்து ஹிம்ஸித்துக்கொண்டு பிடிக்கும்போது 'அஞ்ச ...ண்டா' என்று என்னைக் காத்தருள்க. ... ... ... (7)

நானேதுமுன்மாயமொன்றறியேன் நமன்றமர்பற்றிநலிந்திட்டு * இந்த
ஊனேபுகேயென்றுமோதும்போது அங்குன்னை நானொன்றுநினைக்கமாட்டேன் *
வானேய்வானவர்தங்களீசா மதுரைப்பிறந்தமாமாயனே * என்
ஆனாய்நீயென்னைக்காக்கவேண்டும் அரங்கத்தரவணைப்பள்ளியானே. 8

* * *—பரமபதத்திலுள்ள நித்ய முக்தர்களுக்குத் தலைவனே! திருவடமதுரை ...ல் அவதரித்த மிக்க ஆச்சரிய சக்தியை யுடையவனே! பாகனுக்கு வசப்பட் ...டொழுகுகின்ற யானைபோல் எனக்கு வசப்பட்டிருப்பவனே! அடியேன் உன் மாயை ...ரில் யாதொன்றையும் அறியமாட்டேன்!; யமகிங்கரர்கள் என்னைப் பிடித்து ...ந்தச் சரீரத்தோடே பண்ணவேண்டிய ஹிம்சைகளையெல்லாம் பண்ணிவிட்டுப்

பின்பு, 'இந்த யாதநாசரீரத்தினுள்ளே பிரவேசி' என்று அடிக்கும்போது அவ்வ
தில் உன்னை நான் ஒன்றும் நினைக்கமாட்டேன்; நீ என்னைக் காக்கவேண்டும். (

குன்றெடுத்தாநிரைகாத்தவாயா கோநிரைமேய்த்தவனேயெம்மானே *
அன்றுமுதலின்றறுதியா ஆதியஞ்சோதிமறந்தறியேன் *
நன்றுங்கொடியநமன்றமர்கள் நலிந்துவலிந்தென்னைப்பற்றும்போது *
அன்றங்குநீயென்னைக்காக்கவேண்டும் அரங்கத்தரவணைப்பள்ளியானே.

* * *—கோவர்த்தன மலையைக் குடையாக எடுத்துப் பிடித்துப் பசுக்கள
திரளை ரக்ஷித்தருளின கோபாலனே! மாடுகளின் கூட்டத்தை மேய்த்தருளினவனே
எனக்கு ஸ்வாமியானவனே! உனக்குப் பல்லாண்டு பாடுமவனுக்கிக் கொண்
அந்நாள் தொடங்கி இன்றளவாக ஸர்வகாரண பூதனான உன்னுடைய விலக்ஷண
தேஜோரூபமான திவ்யமங்கள விக்ரஹத்தை அடியேன் மறந்ததில்லை; மிக்
கொடுமை பொருந்திய யமகிங்கரர்கள் என்னை ஹிம்ஸித்து பலாத்கரிக்குப் பிடிக்கு
காலமாகிய அத்தருணத்தில் அவ்விடத்தில் நீ என்னைக் காக்கவேண்டும். ...

மாயவனைமதுசூதனனை மாதவனைமறையோர்களேத்தும் *
ஆயர்களேற்றினையச்சுதனை அரங்கத்தரவணைப்பள்ளியானை *
வேயர்புகழ்வில்லிபுத்தூர்மன் விட்டுசித்தன்சொன்னமாலைபத்தும் *
தூயமனத்தனராகிவல்லார் தூமணிவண்ணனுக்காளர்தாமே. 1

* * *—ஆச்சரிய சக்தியை யுடையனும் மது என்ற அசுரனை ஒழித்தருளின
வனும் பெரிய பிராட்டியார்க்கு வல்லபனும் வைதிகர்களினுல் துதிக்கப்படுமவனு
இடையர்களுக்குத் தலைவனும் அடியாரை ஒருநாளும் நழுவவிடாதவனும் கோ
லில் சேஷசயநனுமான எம்பெருமானை நோக்கிப் பெரியாழ்வார் அருளிச்செய்
இப்பத்துப் பாசுரங்களையும் நிர்மலமான நெஞ்சையுடையராய்க் கொண்டு ஓதவல்
வர்கள் எம்பெருமானுக்கு எப்போதும் அடிமை செய்யப் பெறுவர். .... (10

**அடிவரவு :**

துப்பு சாமிடம் எல்லை ஒற்றை பை தண்ணனவு செஞ்சொல் நானேது குன்
மாய வாக்கு.

ஆழ்வாரெம்பெருமானுர் ஜீயர் திருவடிகளே சரணம்.

---

ஸ்ரீ காஞ்சீ பிரதிவாதிபயங்கரம் அண்ணங்கராசாரியர் தொகுத்த
திருவரங்கத் தமிழ்மாலையில் பெரியாழ்வார் பதிகங்கள்
மூன்றும் முற்றுப்பெற்றன.

ஆழ்வாரெம்பெருமானுர் ஜீயர் திருவடிகளே சரணம்.

---

குறிப்பு :—திருவரங்கத் தமிழ்மாலையில் ஆண்டாள் பதிகமொன்றும் திருமங்கையாழ்வ
பதிகங்கள் ஐந்தும் துணுக்கைப் பாசுரங்களும் சேஷித்திருக்கின்றன ; அவ
அடுத்த இதழில் வெளிவரும்.

அன்றே எனது மறுஜன்மம். என் அழகன் வரதனை நான் கண்ணாரக்கண்டு களிப்பது உங்களால்தான். முன்பு சுவாமிகள் திவ்யப் பிரபந்தத் திருநாம மாலையைத் தொகுத்துக்கொடுக்கும்படி தெண்டம்சமர்ப்பித்துக் கேட்டுக்கொண்டதற்கு இணங்க சுவாமிகள் இந்த ஏழைமீது கிருபைகூர்ந்து இஷ்டத்தை விரைவில் பூர்த்தி செய்தீர்கள். அதனால் நானும் பல பக்தசிரோமணிகளும் பயன்படலாயிற்று.

சுவாமிகளை வெகுநாட்களாக கீதைக்குச் சரியான தமிழ் ஆழ்வார் பாசுரங்களைத் தொகுத்துக் கொடுக்கும்படி கேட்டுக்கொண்டிருக்கிறேன். இன்னும் கிருபை பிறக்கவில்லை. தாங்கள் மனம் வைத்தால் வெகு விரைவில் ஆண்டவன் அருளால் பூர்த்தி செய்வீர்கள். இதை பூர்த்தி செய்தால் பலருக்குப் பெரும் பயன் உண்டாகும். நான் வாழ்ந்தவகை நினைப்பேன். தங்கள் திருப்பாதங்களை யான் அண்டினதற்கு ஓர் அரும்பெரும் பேறு பெற்றவனவேன் யான். என் வேண்டுகோளை ஸ்ரீ பெருந்தேவித்தாயார் மணாளன் வரதன், உங்களால் நிறைவேற்றுவான் என்று நம்புகிறேன். இது ஆண்டவன் என் மூலமாகத் தங்களுக்கு விடும் ஒரு வேண்டுகோள். என்னமோ எழுதினேன் என்று இருக்கவேண்டாம். எவ்வளவோ கிரந்தங்கள் எழுதினீர்கள் கீதைக்குச் சரியான தமிழ்ப் பாசுரங்களைத் தொகுப்பதனால் என்றும் அழியாத புகழையும் பெருமையையும் புண்ணியத்தையும் ஆண்டவன் தங்களுக்குக் கொடுப்பான். இதுதான் என்றும் நிலையாக உள்ளது. தங்கள் பேரில் உள்ள அன்பால் இப்படி எழுதுகிறேன் மன்னிக்கவும். இந்த தொண்டு சுவாமிகள் தவிர வேறு யாராலும் செய்ய முடியாது இது உண்மை. அன்பே உருவெடுத்த தாங்கள் என் ஆசையை வெகு சீக்கிரம் நிறைவேற்ற வேண்டும். அடியேன் விண்ணப்பம் மிக்க நியாயமானது என்று நினைக்கிறேன். இந்த 35 வருடமாக சுவாமியை அண்டின அடியேன் சுவாமியிடமிருந்து வேறு எதையும் கேட்கமாட்டேன், இதை எழுதும்போதும் என் கண்கள் தாரைதாரையாக ஆனந்தக் கண்ணீர் சொரிகிறது. உங்களது உள்ளம், அறிவு பக்தி சொல்வன்மை—என்னைப் போன்ற கல்நெஞ்சம் படைத்தவனை மனம் உருகவைப்பது உண்மை. யார் இந்த உபகாரத்தைச் செய்வார்கள். தங்களை பக்திமான்களும் அறிவாளிகளும் தான் போற்றவேண்டும். சுவாமிகள் நீடூழிகாலம் சுகமாக இருந்து இந்த வைணவ உலகத்திற்குப் பேருதவி செய்ய ஆண்டவனைக் கோருகிறேன். என்னை மன்னிக்கவும். ஏதோ மிக்க கொச்சையாக எழுதியதற்கு. உங்களது குழந்தைதான் எப்போதும் தங்களுடனே இருப்பதாக எண்ணியிருக்கும் தங்கள் பாத தூளி

ச. புண்டரீகாக்ஷன், 5—6—'64.

---

**பத்ராதிபரின் குறிப்பு:** ஸ்ரீமான் புண்டரீகாக்ஷ பாகவதருடைய கடிதம் எனதுநெஞ்சை மிகவும் உருக்கினபடியால் அக்கடிதம் இங்கு ஆதரவோடு வெளியிடப்பட்டது. பகவத் குணக்கடலில் ஆழ்ந்து திளைக்குமவர்களில் முன்னணியில் நிற்பவர் இப்பெரியார். இவருடைய மிகவுயர்ந்த விருப்பத்தை ஷை கடிதத்தில் கண்டீர்கள். அந்த நெடுநாளைய விருப்பத்தை இதுகாறும் நிறைவேற்றாதிருந்ததற்கு அநுதாபத்தைத் தெரிவித்து "அருளிச்செயல் கீதை" என்னும் நூலை விரைவில் எழுதித் தருவதாக இசைந்ததை உலகறிய இப்பத்திரிகையின் மூலமாக வெளியிட்டபடி.